# எல்லாம் ஒன்றே.







By

V. R. S.

MUKUNDHAN PRESS, CHIDAMBARAM.

# எல்லாம் ஒன்றே.




ஆசிரியர்:

வையை R. சுப்பிரமணிய ஐயர்.

வெளியிட்டவர்:

பின்னலூர் இராமலிங்கம்பிள்ளை.

1935. விலை அணா 2.

# முன்னுரை.

"எல்லாம் ஒன்றே" என்பது சிறிய நூல்; சிறியதாயினும் பெரும்பொருள் அடங்கியது, ஊன்றிப் படிப்பார்க்கு ஆத்மலாபம் அளிக்கத்தக்கது. இது வையை, ஆர். சுப்பிரமணிய ஐயரால் இயற்றப்பட்டது. இப்பொழுது இப் புத்தகம் கிடைக்கவில்லையென்றும், இதிலடங்கிய விஷயங்களை வெளியிடுவதனால், பலருக்கு உபகாரமாக இருக்குமென்றும் சிற்சில தர்மாத்மாக்கள் கேட்டுக்கொள்ள அவர்களுடைய விருப்பத்திற்கிணங்கி திருவண்ணாமலை பகவான் ஸ்ரீ ரமணமஹர்ஷி அவர்கள் சந்நிதானத்தில் இவன் குருகுலவாசம் செய்தகாலம் ஆங்கு ஆச்சிரமத்தில் கிடைத்ததொரு பிரதியினின்றும் இதனைப் பிரசுரிக்கின்றுன்

ஜோதிஆச்சிரமம்
பின்னலூர்.
1—9—'35.

துரியானந்தன்.

# பொருள் அடக்கம்.

# முகவுரை.

மனிதர்கள் விரும்புவது இன்பம்; வெறுப்பது துன்பம். இதையே மற்றப் பிராணிகளும் செய்கின்றன. ஆகையால், இவ்வளவோடு நின்றுவிட்டவர்கள் சாதாரண மனிதர்கள். ஆனால், மனிதர்களுக்குள் உயர்ந்த நிலையைப் பெற்றவர்களது கொள்கை என்னவென்றால்—நியாய வழியில் நடக்கவேண்டும்; அப்போழுது வரும் இன்பமோ துன்பமோ இரண்டையும் பொறுமையோடு ஏற்றுக்கொள்ளவேண்டும்—என்பதுதான். இந்த உணர்ச்சி உள்ளவர்களுடைய ஒற்றுமை நீடித்து நிற்குமே யொழிய, மேற்சொன்ன சாதாரண மனிதர்களுடைய ஒற்றுமை நீடித்து நிற்காது. இவ்வுணர்ச்சி யுடையவர்களுடைய ஒற்றுமையினாலேயே உலகத்தார்க்கு நன்மை உண்டாகவேண்டியிருக்கிறது. இதில், "நியாயம்" என்றால் என்ன? — என்ற ஒரு கேள்வி மிக அரியமான து. அதற்கு பதில் எழுதி முடிந்தபாடு எப்பொழுதும் இல்லை; ஏன்? நியாயம் என்பது அந்த அந்த இடம் நோக்கி உணரவேண்டியிருக்கிறது. யார் எவ்வளவு எழுதி வைத்தாலும், அவர்களாலும் விட்டுப்போன ஒரு இடம் உலகத்தில் நேரிடாமல் இராது. ஆகையால், எந்த ஒரு உணர்ச்சியை அடைந்தால் "நியாயம் என்பது இன்னது" என அந்தஅந்த இடத்துக்குத் தக்கபடி ஒருவனுக்குத் தோற்றுமோ, அந்த ஒரு உணர்ச்சியை ஒவ்வொருவரும் அடையவேண்டியது இன்றியமையாததா யிருக்கிறது.

அது ஒரே உணர்ச்சிதான். அப்படிப்பட்ட உணர்ச்சிகள் பல இல்லை. அது ஒன்றாகவேயிருந்தும் அதை உலகத்தார் உணர்வது மிக அருமையாக இருப்பதுதான் இவ்வுலகத்தில் வியப்பை உண்டுபண்ணுகிறது. இதையன்றி வேறு வியப்பு உலகத்தில் இருப்பதாக எனக்குத் தோற்றவில்லை. அந்த ஒரு உணர்ச்சியை "உபநிஷத்துக்கள்" மிக வெளிப்படையாய்ப் போதிக்கின்றன. இந் நூலில், எனக்குத் தோற்றின ஒரு முறையில், அந்தக் கருத்தை வெளியிட்டிருக்கிறேனேயொழிய, நான் புதிதாக எழுதினது ஒன்றுமில்லை. ஆயினும், இது என் கடமைகளில் ஒன்றாயிருக்கிறது.

இதில் உள்ள அத்தியாயங்கள் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாய் இருக்கையினாலே, ஒன்றில் விடுபட்டுப் போனதாகத் தோற்றும் ஒருவிஷயம் மற்றொன்றில் சொல்லப்பட்டிருக்கும்; வெளிப்படையாய்த் தோற்றாத ஒரு விஷயம், ஆழ்ந்து கவனித்தால் தோற்றும். அதிலும் விளங்காததை மற்ற நூல்களாலும் பெரியோர்களாலும் உணரவேண்டியது வாசிப்போர் கடமைகளில் ஒன்றாயிருக்கிறது.

ஜகஜ்ஜநநி ஸத்குரோபாஹி.

---

# எல்லாம் ஒன்றே.

## 1. ஒன்று.

உன்னால் காணப்பட்ட இவ்வுலகமும், இவ்வுலகத்தைக் காண்கிற நீயும் எல்லாம் ஒன்றே.

2. நான் என்றும், நீ என்றும், அவன் என்றும், அவள் என்றும், அது என்றும் நீ எண்ணுகிற எல்லாம் ஒன்றே.

3. சித்து — அதாவது அறிவுடையது என்று நீ எண்ணுகிற உயிர்களும், ஜடம்—அதாவது அறிவற்றது என்று நீ எண்ணுகிற பூமி, ஜலம், நெருப்பு, காற்று முதலியவைகளும் எல்லாம் ஒன்றே.

4. "எல்லாம் ஒன்று" என்று நீ எண்ணுவதனால் உண்டாகும் நன்மை, "வேறு, வேறு" என்று எண்ணுவதனால் உண்டாவதில்லை. ஆகையால் எல்லாம் ஒன்றே.

5. "எல்லாம் ஒன்று" என்று எண்ணுவதனால், உனக்கும் நன்மை; பிறருக்கும் நன்மை. ஆகையால் எல்லாம் ஒன்றே.

6. நான் வேறு, நீ வேறு, அவன் வேறு என்று இவ்வாறு எண்ணுகிறவன், தனக்கு ஒருவிதம் நடப்பான்; பிறருக்கு ஒருவிதம் நடப்பான். அவ்வாறு நடக்காமலிருக்க அவனால் முடியாது. நான் வேறு, பிறர் வேறு—

என்று எண்ணிக்கொண்டிருக்கும் எண்ணம் ஒரு விதையாக இருந்து, தனக்கு வேறு, பிறருக்கு வேறாக நடக்கிற பக்ஷபாதமாகிய மரத்தைத் தோற்றுவிக்கின்றது. தானும் பிறரும் எல்லாம் ஒன்றே என்று அறிந்தவன், எப்படி நியாயம் தவறி நடப்பான்? பேதம் என்கிற விதை உள்ள வரையில் உன்னையறியாமலே நீ தீமையில், பக்ஷபாதமாய் நடத்தலில் இறங்கிவிடுவாய். ஆதலால், பேதபுத்தியை விட்டுவிடு. எல்லாம் ஒன்றே.

7. இவ்வுலகத்தில் பொருள்களெல்லாம் வேறு வேறாகத் தோன்றுகின்றனவே, ஒன்று என்று எப்படி எண்ணுவேன், அதற்கு ஒரு வழி உண்டா? என்று கேள்; சொல்லுகிறேன்: ஒரு மரத்தில் இலை வேறு, பூ வேறு, காய் வேறு, கிளை வேறு — இப்படிக் காண்கிறோம். ஆனாலும் அவையெல்லாம் ஒன்றே. மரம் என்ற சொல்லில் அவ்வளவும் அடங்கியதே. அவ்வளவுக்கும் மூலம் ஒன்று, உயிர் ஒன்று; அதுபோலவே, இவ்வுலகில் வேறுவேறாகக் காணப்படும்—எல்லாப் பொருள், எல்லா உடல், எல்லா உயிருக்கும்—மூலம் ஒன்றே. உயிர் ஒன்றே. ஆகையால் எல்லாம் ஒன்றே.

8. ஓ! நல்லவனே! எல்லாம் ஒன்றென்பது நன்மைக்கோ தீமைக்கோ, நீயே கவனி. தன்னைப்போலப் பிறரையும் பிறரைப்போலத் தன்னையும் பார்க்கிறவனே நன்மையில் நடப்பான் என்றால், தானாகவே பிறரையும் பிறராகவே தன்னையும் எண்ணுகிறவனுக்குத் தீமை எப்படி வரும்? ஒன்றென்று எண்ணுவதைக் காட்டிலும் உயர்ந்த வழி நன்மைக்கு வேறு இருக்குமானால் சொல். ஒருநாளும்

வேறு வழிகள் இவ்வளவு நன்மையைத் தரமாட்டா. ஒன்றென்று எண்ணுவதைவிட அதிகமாக எப்படி மற்ற உயிர்களிடத்தில் ஒருவன் அன்பாயிருக்க முடியும். ஒன்றென்றே எண்ணு; ஒன்றென்றே நேசி. உண்மையில் எல்லாம் ஒன்றே.

9. ஒன்றென்று அறிந்தவன் மனது அடைந்த சாந்தம், ஆறுதல் யாருக்கு உண்டு! அவனுக்குக் கவலையில்லை. எல்லாருடைய நன்மையும் அவனுடைய நன்மையாயிருக்கிறது. பிள்ளைகளினுடைய நன்மையை, தாய் தனது நன்மையாகக் கருதுகிறாள். ஆயினும், தான் வேறு, அந்தப் பிள்ளைகள் வேறு என்ற ஒரு எண்ணம் அவளுக்கு இருப்பதனாலே, அவள் அன்பும் பரிபூரண அன்பு அன்று. எல்லாம் ஒன்று என்று அறிந்த ஞானியின் அன்போ, தாய் அன்பிலும் மேலான அன்பு. ஒன்றென்று அறிந்துகொள்வதைவிட இவ்வன்பு வருவதற்கு வேறுவழி இல்லை. ஆதலால் எல்லாம் ஒன்றே.

10. இவ்வுலகமெல்லாம் உன்னுடைய அழியா உடம்பாகவும், நீ இவ்வுலகத்துக்கெல்லாம் அழியாத உயிராகவும் பார். இவ்வாறு நீ பார்ப்பதில் தீமை உண்டானால் சொல். தீமையில்லாத வழியில் நடப்பதற்கு யார்தான் அஞ்சுவார்கள்? தைரியங்கொள். வேதம் இந்த உண்மையைத்தான் சொல்லுகிறது. உன்னைத் தவிர ஒன்றும் இல்லை. எல்லா நன்மையும் உனக்கு உண்டு. நீ நன்மையே வடிவாகிறாய். உன்னால் பிறர் அடைவதெல்லாம் நன்மையே. தன் உயிருக்கும் தன் உடலுக்கும் தீமை செய்வார் யார்?

உடலில் புண் உண்டானால் சிகிச்சை செய்கிறோம்; அதில் உடலுக்குச் சிறிது துன்பம் உண்டாயினும் அது நன்மையின் பொருட்டே. அவ்வாறே நீ செய்கிற சில செய்கைகளும் இருக்கும்; அதுவும் உலக நன்மையின் பொருட்டே. அதனால் நீ பேதபுத்தியுடையவனாகமாட்டாய். சுருக்கமாய்ச் சொல்லுகிறேன்:— ஒன்று என்று உணர்ந்தவன், எப்படி நடக்கவேண்டுமோ அப்படி நடப்பான். ஒன்று என்ற உணர்ச்சி, அவனை உண்மையில் நடத்துகிறது. அவனுக்குத் தவறுதல் என்பது கிடையாது. அவன்தான் உலகத்தில் கண்காணவந்த தெய்வம். எல்லாம் ஒன்றே.

---

## 2. நீ.

---

1. நீ யார்? இந்த உடல் நீயா? இந்த உடல் நீயாயின்: நீ தூங்கும்பொழுது இவ்வுடலில் ஒரு பாம்பு ஊர்ந்தாலும் நீ அறியமாட்டாயே. அப்படியிருக்க நீ இவ்வுடம்பு ஆவாயா? ஒருநாளும் நீ இவ்வுடம்பு ஆகாய். ஆகையால் இவ்வுடம்புக்கு வேறாயுள்ளவன் நீ.

2. நீ தூங்கும்போது கனாக் காண்கிறாயே; அந்தக் கனாவில் உன்னை ஏதோ ஒருவனாக எண்ணிக்கொள்கிறாயே; அவ்வொருவன் நீயா? அல்ல. அவ்வொருவன் நீயாயிருந்தால், நீ விழித்துக்கொண்டவுடன் அவ்வொருவன் எங்கே? அவ்வொருவன் நீ ஆகாமற்போனதோடு அவ்

வொருவனாக உன்னை நீ எண்ணியிருந்ததற்காக நீயே வெட்கப்படுகிறாய். ஆகையால், அவ்வொருவனும் நீ அல்ல. அவ்வடிவத்துக்கு வேறாயுள்ளவன் நீ.

3. கனவுங் காணாமல் நீ அயர்ந்து தூங்கினாயே; அப்பொழுது உன் நிலைமை என்ன? அந்த நிலைமைதான் உனக்கு வடிவமோ என்னில், அந்த நிலைமையை உனது வடிவமாக ஒப்புக்கொள்ள உனக்கு ஒருநாளும் சம்மதமிராது. ஏன்?— உன் நிலைமை இன்னதென உனக்கே உணர வராத ஒரு அந்தகாரத்தை நீயாக வைத்துக் கொள்ள, நீ அவ்வளவு அறிவற்றவனல்லவே. அறிவினால் மற்றப் பொருள்களைவிடப் பெருமைபெற்ற நீ, அறிவற்ற அதாவது தன் உணர்ச்சியற்ற ஒரு நிலையை நீயென எப்படி ஒப்புக்கொள்வாய்? அதுதான் எப்படி உண்மையில் உன்னுடைய வடிவமாயிருக்கும்? இருக்காது. "இந்த நிலை, தன்னைத்தான் அறியாத அந்தகார நிலை" என்று அறிகிற அறிவாளி நீயாயிருக்க, உன்னால் உணர்ந்து இகழப்பட்ட ஒரு நிலை நீ ஆவாயா? ஆகையால், இந்த அந்தகார நிலையும் நீ அல்ல. அதற்கு வேறானவன் நீ.

4. உன்னுடைய இந்த ஸ்தூல உடம்பே நீ அல்ல என்னும்பொழுது, இதற்கும் புறம்பான ஒரு பொருள் நீ ஆவாயா? ஆகவே, இவ்வுடம்பு நீ அல்லாதது போலவே, இவ்வுடம்புக்குப் புறம்பான பொருள்களும் நீ அல்ல; இவ்வுடம்பினுள் நீ கண்ட கனவாகிய மற்றொரு உடம்பும் நீ அல்ல; ஒன்றும் அறியாத அறியாமை வடிவாகிய ஸுஷுப்தியும் நீ அல்ல; இம் மூவகை வடிவத்துக்கும் இவ்வுலகத்துக்கும் வேறாயிருப்பவன் நீ.

5. இம்மூவகை வடிவமும் இருவகையில் அடங்கும். ஒன்று—மற்றொரு பொருளைச் சுட்டியறிந்துகொண்டிருக்கும் நிலைமை; மற்றொன்று—தன்னைக்கூடத் தான் அறியாத நிலைமை. ஜாகரத்திலும் சொப்பனத்திலும் நீ ஏதாவது ஒரு பொருளை முன்னிலையாகக்கொண்டு, சுட்டறிவுடையவனாயிருக்கிறாய். ஸுஷுப்தியில் நீ ஒன்றையும் அறியாத, அதாவது உன்னைக்கூட நீ அறியாத நிலைமையில் இருக்கிறாய். இவ்விரண்டு நிலைமையில் உன்னுடைய ஸகல அநுபவங்களும் அடங்கும். இவ்விரண்டு நிலைமையும் உன் சொந்த நிலை அல்ல. இந்த இரண்டு நிலைமைக்கும் வேறாயுள்ள மற்றொரு நிலைமையை உடையவன் நீ.

6. அந்த நிலைதான் என்னவெனில், அதுவே துரீயம் எனப்படும். துரீயம் என்றால், நான்காவது நிலை. ஏன் இப்பெயர் வந்ததென்றால், "நீ கண்ட ஜாகரம், சொப்பனம், ஸுஷுப்தி என்னும் மூன்றும் உன் நிலை அல்ல; இதற்கு வேறாகிய நான்காவது நிலைமையையுடையவன் நீ" என்பதற்காக அந்த நிலைக்குத் துரீயம் என்று பெயர் வைக்கப்பட்டது. ஜாகரம், சொப்பனம், சுழுத்தி என்னும் மூன்றையும் ஒரு சொப்பனமாக வைத்துக்கொண்டால், அம்மூன்றினின்றும் விழித்த ஜாகரம் துரீயமாகும். ஆகவே, துரீயமானது, ஒடுக்கத்தில் ஸுஷுப்தியைக் காட்டிலும் ஒடுக்கமுள்ளதாயும், விழிப்பில் ஜாகரத்தைக் காட்டிலும் விழிப்புள்ளதாயும் இருக்கிறது. ஆகையால், ஜாகர சொப்பன சுழுத்திகளுக்கு வேறாயுள்ள அந்தத் துரீய நிலையே உன் சொந்த நிலை. அதுவே நீ.

7. அத்துரீயம் எப்படிப்பட்டதென்னில், — அறிவானது ஒன்றையும் சுட்டியறியாது; அவ்வறிவு தன்னையறியாமலும் இராது. அதாவது வேறொரு பொருளையும் அறியாததாயும், ஆனால் ஜடத்தன்மையில்லாததாயும் இருக்கிற அந்த அறிவே துரீயமாகும். அதை ஒரு க்ஷணமாவது கண்டவன், உண்மையைக் கண்டவன். அதுவே நீ.

8. இந்தத் துரீயத்தைக் கண்டவனுடைய மேல் நிலை என்னவெனில்—அவன் அதே நிலையில், அதாவது ஒரு பொருளையும் சுட்டியறியாத நிலையில் எப்பொழுதும் இருப்பான் என்பது ஒருவருடைய அநுபவமும் அன்று. இந்தத் துரீயத்தைக் கண்டவன் அந்த நிலைமையிலிருந்து இவ்வுலகில் விழிக்கிறான். ஆனால், அவனுக்கு இவ்வுலகம் பழைய உலகம் அன்று; தான் கண்ட அந்த ஏகமான துரீய அறிவு எதுவோ அதுவே இந்த எல்லாமாய் விளங்குகிறதெனக் காண்கிறான். அந்த அறிவையன்றி இவ்வுலகத்திற்கு அவன் வேறு வடிவம் கற்பித்துக்கொள்ளமாட்டான். ஆகவே, அவன் தனக்குள் கண்ட அதையே புறம்பில் வேறு வடிவமாகக் காண்கிறான். பழைய பேதம் ஒழிந்து அபேத நிலையை இப்பொழுது அவன் எங்கும் காண்கிறான். இப்பொழுது எல்லாம் அவன். அவனையன்றி ஒன்றும் இல்லை. கண் மூடினும் விழிக்கினும் எது எவ்வாறாயினும் எல்லாம் அவனுக்கு ஒரே நிலை. அதுவே பிரம்ம நிலை. அதுவே உள்ளபடி உள்ள நிலை. அவ்வுண்மை நிலையே நீ.

9. இதற்குமேல் யாதொரு நிலையும் இல்லை. உள் என்றும் புறம்பு என்றும் சொல்லும் சொல்லுக்கு அவனுக்குப் பொருள் இல்லை. எல்லாம் ஒன்று. அவன்

உடம்பும் சொல்லும் எண்ணமும், அவனுக்கென்று அபயத்தோடு உழைத்தலை மறந்துவிடும். அவற்றின் உழைப்பெல்லாம் எல்லாருக்கும் எல்லாப் பொருளுக்கும் பொதுவான அருள் உழைப்பு. "தான்" என்றதுண்டு, போனது போனதுதான். அந்த அகம்பாவத்துக்கு மறுபடி உயிர்த்தெழுதல் ஒருநாளும் கிடையாது. இதனால் இவன் அப்பொழுதே முத்தன் என்று சொல்லப்படுகிறான். இந்த ஸ்தூல உடம்பு இருந்தாலும், அது அவன் இருப்பு அன்று. இந்த ஸ்தூல உடம்பு இறந்தாலும், அது அவன் இறப்பு அன்று. அவன் நித்யன். அவனைத் தவிர ஒன்றும் இல்லை. அவனே நீ.

10. தெய்வம் என்பது எது? அருள் வடிவமானது. அருள் என்பது எது? தான் என்றதுண்டான எண்ணம் அற்றது. இந்நிலைமையொன்று உண்டு என்பதை ஒருவன் உணர்வது எப்படி? தான் அந்த நிலையைப் பெற்றால்தான். அந்த நிலையைப் பெற்றவன் "தெய்வத்தோடு ஒன்றாகித் தெய்வத்தை அறிந்தான்" என்று வேதத்தில் புகழப்படுகிறான். ஆதலின், ஒருவன் இவ்வுலகத்தில் அடையக்கூடிய நன்மையும், உலகத்துக்குச் செய்யக்கூடிய நன்மையும் இந்த அபேத நிலையைப் பெறுதலே. உண்மையில் இதையன்றி வேறு நிலைகள் இல்லை. வேறு நிலைகளெல்லாம் அறியாக் காலத்தில் தோற்றுபவை. அறிந்தவனுக்கு இருப்பது ஒரே நிலைதான். அதுவே நீ.

---

# 3. கடவுள்.

---

1. கடவுள் யார்? நம்மால் காணப்பட்ட இவ்வளவையும் கடந்தவர் கடவுள். இவ்வுலகத்தைக் கடந்தவர் என்றதனால், இவ்வுலகத்துக்கும் அவருக்கும் ஸம்பந்தம் இல்லையோ என்றால், அவருடைய ஸம்பந்தம் இல்லாத ஒரு அணுவாவது இங்கே கிடையாது. பின்னை, உலகத்தைக் கடந்தவர் என்றதன் கருத்துத்தான் என்னவென்றால்—உலகம் என்பது, நாமும் நம்மால் அறியப்படும் பொருள்களும் அல்லவா? அதாவது, சித்தும் ஜடமும் உலகமென்று சொல்லலாம். இந்த சித்து, ஜடம் என்னும் இரண்டையும் படைத்தவரை நாம் என்னவென்று சொல்லலாம்? இந்த இரண்டிக்குள்ளும் உயர்ந்தது "சித்து" என்கிறோம். நாம் கண்ட பொருள்களுக்குள் உயர்ந்த ஒரு பொருளின் இனத்தைச் சேர்ந்தவரென்றுதான் நம்மால் எண்ண முடியுமேயொழிய, அதைவிட வேறாக எண்ண நமது அறிவு சக்தியற்றதாகின்றதல்லவா? ஆகவே—நம்மைப் படைத்தவர் நமது சக்திக்கு மேற்பட்ட நிலையையுடையவர்; நமது சக்தியால் அவரை அறிந்து சொல்வதற்கு அவர் அடங்குபவரல்லர்; அவ்வறிவைக் கடந்தவர் — என்பதற்காகவே, அவர் எல்லாவற்றையுங் கடந்தவர் என்று சொல்லப்பட்டது. அதனாலேயே அவருக்கு வைக்கப்பெற்ற பெயர் "கடவுள்."

2. அந்தக் கடவுள் நம்மால் ஒருவகையிலும் அறியப்படாதவரா என்றால், அப்படி முழுவதும் அறியப்படாதவர் அல்லர். நம்மால் ஒருவாறு அறியப்பட்டிருக்கிறார்.

அவ்வளவு அவர் அருள் செய்திருப்பதே நமக்குப் போதுமானது. அவர் எவ்வளவு மகிமையை உடையவராயிருந்தாலும், அவையெல்லாம் நமக்கு வேண்டாம். அவருடைய எந்த மகிமைகளைத் தெரிந்துகொள்வதனாலே நமக்குத் துன்ப நிவிர்த்தி உண்டாகுமோ, அவ்வளவு மகிமைகளை அவர் நமக்குத் தெரிவிக்கிறார். நமது நிலைமைக்கு, அதாவது நம்முடைய குறைகளை நீக்கிக்கொள்வதற்கு எவ்வளவு அறிவு அந்தக் கடவுள் விஷயமாக நமக்கு வேண்டுமோ, அதற்குமேல் ஒரு அணுவைக்கூட நமக்கு அவர் அறிவிக்க நியாயமில்லை. ஆகையால், அந்தக் கடவுள் நமக்கு வேண்டிய அளவு அறியப்பட்டவர். நமக்குள் அகப்பட்டவர். எவ்வளவு கரையற்ற மகிமையுடையவரானாலும் நம்மால் அறியப்பட்ட ஒரு கரையை உடையவரே கடவுள்.

3. நம்மால் கடவுள் விஷயத்தில் தெரிந்துகொள்ளப்பட்ட கரை என்னவென்றால், அவர் ஸத், சித், ஆனந்தம் என்னும் லக்ஷணத்தையுடையவர் என்பதே. ஸத்-என்றால் அழிவற்றது, எக்காலத்திலும் உள்ளது என்பது பொருள். ஒருகாலத்தில் அவர் இல்லாமற்போவது உண்டானால், அவரை அழித்தவர் யார்? அவரைப் படைத்தவர் யார்?— என்ற கேள்வி வரும். ஆகவே, அழியக்கூடிய எல்லாப் பொருள்களுக்கும் தலைவனாய் அழியாதவன் ஒருவன் வேண்டுமாதலால் அந்த அழியாமையை உடையவரே கடவுள். அந்த அழியாமை "ஸத்" என்று சொல்லப்படும். இனி, சித்— என்பது என்னவென்றால், அறிவுள்ளது என்பது. இங்கே அறிவென்பது, தடையற்ற அறிவு; நம் மறிவுபோல் தடுமாற்றமுடையதன்று. அவ்வறிவால் செய்யப்பட்ட

காரியங்களில் ஒழுங்கீனம், தவறுதல்—இவற்றின் கலப்பு இல்லை. அறிவு என்பது அதுதான். நம்முடைய அறிவோ, அவரால் தூண்டப்படவேண்டியதாயும் அவ்வாறு தூண்டப்படாதவரையில் ஒழுங்கீனமும் தவறுதலும் உடையதாயும் இருக்கும். "உங்கள் அறிவு ஒழுங்கீனமும் தவறுதலும் உடையது" என்று பலதடவை அவர் நமக்குப் புத்தி கற்பிக்கிறார். ஜடமாகிய இவ்வுலகப் பொருள்களை எவ்வளவு ஒழுங்குள்ளதாக அவர் படைத்திருக்கிறார்! "இவ்வளவு பெரிய ஆலமரத்துக்கு இவ்வளவு சிறிய பழத்தை ஏன் படைத்தார்?" என்று குற்றம் கூறிய நாஸ்திகனுக்குப் புத்தி வந்த கதையைப் பலரும் கேட்டிருக்கலாம். ஒரு ஜடப்பொருள் ஒழுங்கான நிலைமையில் வந்து பயன்பட வேண்டுமானால், அதற்குமுன் ஒரு "சித்" இருந்தல்லவோ அதனைச் செய்யவேண்டும். தடையற்ற அறிவால் ஆகக்கூடிய ஒரு வேலை, அறிவே அற்ற ஜடப்பொருளால்தான் ஆகுமா? அல்லது, தடையுள்ள நம்முடைய அறிவால்தான் ஆகுமா? ஒருபோதும் ஆகாது. ஆகையால், அந்தக் கடவுள் "சித்" என்றும் சொல்லப்படுகிறார். இனி, ஆனந்தம் என்பது என்ன?—தனக்கு மற்றொன்று வேண்டும் என்ற ஆசை அற்ற நிலைமை. அது எப்போதும் நிறைந்த சாந்தமாயிருக்கிறது. அதற்கு ஒன்று வேண்டும் என்று வந்துவிட்டால், நம்மைவிட அவர் பெரியவராவது எப்படி? அவரால் நாம் இன்பம் அடைவது எப்படி? அவருடைய குறைகளை நிரப்புதற்கு வேறொருவரல்லவோ ஆளாகவேண்டும்? அப்படிப்பட்டவராக அவரை யார் சொல்லுவார்? தனக்குத் தன்னிலையிலேயே திருப்தியுள்ள அந்த நிலையே ஆனந்தமாம். ஆகவே,

அவர் "ஆனந்தம்" என்றும் சொல்லப்படுகிறார். இம்மூன்றும் (ஸத், சித், ஆனந்தம்) ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்தால் ஒன்றும் நிலைக்காமற் போய்விடும். ஆதலால், அவர் "ஸச்சிதானந்த ரூபி" என்று நம்மால் அறியப்பட்டிருக்கிறார். ஆகவே, ஸச்சிதானந்தம் என்று நம்மால் அறியப்பட்ட ஒரு கலையையுடையவரே கடவுள்.

4. எவன் துரீயநிலையைப் பெற்றானோ, எல்லாப் பொருளையும் ஒன்றாகப் பார்த்தானோ, அவனே அக்கடவுளின் ஸச்சிதானந்த நிலையை உள்ளபடி உணர்ந்தவன். உணர்ந்தவன் அக்கடவுளிடம் எப்படி ஒற்றுமைப்பட்டிருக்கிறான் என்பது, வாய்ப்பேச்சால் சொல்லக்கூடியதன்று, காதுகளால் கேட்கத்தக்கதன்று; உணர்ச்சியால் உணரத்தக்கது. ஆனால், அவ்வுணர்ச்சியை ஒருவன் பெற வழிகள் உண்டு. அவ்வழிகளைச் சொல்லலாம்; கேட்கலாம்; சொல்வதைக் கேட்டு நடந்தால் உணரலாம். அவ்வாறு நம்மால் உணரக்கூடியவரே கடவுள்.

5. அவருக்குப் பெயர் இல்லை; நாம் வைத்த பெயர் தான். அவருக்கு வடிவம் இல்லை; நாம் வைத்த வடிவந்தான். அதில் குற்றமென்ன? எந்தப்பெயர் அவர் பெயர் அல்ல; எந்த வடிவம் அவர் வடிவம் அல்ல, அவர் இல்லாத சத்தமும் அவர் இல்லாத வடிவமும் எது? ஆகையால், அவர் உண்மையை நீ தெரிந்துகொள்வதற்குமுன், உனக்கு இஷ்டமான ஒரு பெயரை அவருக்கு நீ வைத்துக்கொண்டு அவரைப்பற்றி ஞாபகப்படுத்தலாம்; உனக்கு இஷ்டமான ஒரு வடிவத்தை வைத்துக்கொண்டு அவரைப்பற்றி நீ ஞாபகப்படுத்தலாம். உன் முயற்சி இன்றி அவர் அருளை நீ

எதிர்பார்ப்பது ஒருநாளும் பலிக்காத காரியம். உன் முயற்சி இன்றி அவர் அருள் பலிப்பது உண்டானுல், இப்பொழுது எல்லாரும் ஒரே நிலையில் இருக்கவேண்டியவர்கள். வேறுபாடு காணப்பட நியாயம் இல்லை. அவர் நமக்கு வழிகளைக் கற்பித்திருக்கிறார். உன் முயற்சியால் நட; குறித்த இடத்தை அடை; சுகி. இதைத் தவிர நீ அவரிடத்திலிருந்து வேறொன்றை எதிர்பார்ப்பது, உன் சோம்பலையும் உன் சுயநயத்தையும் காட்டுகின்றது. எல்லாருக்கும் உள்ள வழிதான் உனக்கும். முயற்சியை விடாதே. முயற்சியாலேயே அறிய அடையத் தகுந்தவர் கடவுள்.

6. எல்லாவற்றிலும் சிறந்த மற்றொரு முயற்சி உண்டு. நீ அந்தக் கடவுளை நாமரூபங்களால் வழிபடுவதைவிட இது குறைவாய்த் தோற்றும். ஆனால், இப்பொழுது சொல்லப் போவதே அதனிலும் சிறந்த வழிபாடு. அதாவது, உன்னால் நன்மையடையவோ தீமையடையவோ பாத்தியமுள்ள ஸகல உயிர்களிடத்தும் நீ காட்டும் அன்புதான். அந்த அன்பை மற்ற உயிர்களிடம் காட்டாது நீ செய்கிற எந்த வழிபாடும், நீ கடவுளை இகழ்வதாகவே முடியும். கடவுளுக்கு உன்னால் ஆகவேண்டியது என்ன? உன்னால் யார்யாருக்கு என்னென்ன ஆகவேண்டுமோ அவற்றைச் செய்யாத நீ, கடவுளால் உனக்கு ஆகவேண்டியதை எதிர்பார்ப்பது, சுயநயம் பாராட்டும் தீக்குணத்திலேயே அடங்கும். அப்படிப்பட்ட சுயநயம் உள்ளவருக்கு கடவுள் ஸந்நிதியில் வேலை இல்லை. அங்கு நடக்கும் வேலையெல்லாம், சுயநயம் முற்றும் ஒழிந்த வேலை. ஆதலால், எங்கும் கடவுளுடைய இடமாகவும், அவ்விடங்களிலெல்லாம்

இருப்பவர் கடவுளாகவும் கண்டு வழிபடு. அப்படிப்பட்ட உயர்ந்த வழிபாட்டுக்குத்தான் உள்ளபடி கட்டுப்படுகிறவர் கடவுள்.

7. இவ்வாறு நீ அந்தக் கடவுளுக்கு நாமரூபங்களைக் கற்பித்துக்கொண்டும், எல்லா நாமமும் ரூபமும் அவருடையதாகக் கண்டு அன்பு காட்டியும் வந்தால், உன் மனம் வரவரப் பழுக்கும். காய் பழுக்கப் பழுக்க அதற்குச் சுவை முதிர்வதுபோல, உன்னிடத்திலும் நன்மை வளர்ந்து தீமை சுருங்குவதை நீயே தெரிந்துகொள்வாய். இப்படி உன் மனம் பக்குவப்பட்டுக்கொண்டு வருகையில், நீ குருநாதனைச் சந்திக்கிற ஒரு பக்குவம் வரும். அது, நீ அவனைத் தேடிச் செல்வதும் அல்ல; அவர் உன்னைத் தேடி வருவதும் அல்ல; உரிய காலத்தில், உங்களுடைய ஸந்திப்பு ஏற்படும். அவரவர்கள் வழியில் அவரவர்கள் வந்துகொண்டிருக்கிறார்கள். உன் பக்குவம் அவரைச் சந்திக்கச் செய்கிறது; அவரை நம்பச் செய்கிறது; அவரை உனக்கு ஒரு வழி சொல்லவும் தூண்டி, உன்னை அதைக் கேட்கவும் தூண்டுகிறது. அவ்வழியே கடவுளுக்கு, அதாவது துரீயநிலைக்குச் செல்லும் நேர்வழி. அவ்வழியில் நீ நடப்பாய். குறித்த பொருளை அடைவாய். அந்தப் பொருளே ஸச்சிதானந்தம்; எல்லாப் பொருளுக்கும் உயிர்ப் பொருள். அதே கடவுள்.

8. குருநாதனால் காட்டப்பட்ட வழி — முடிவான வழி; நேர்வழி; யோக வழி; அநுபவ வழி; இயற்கை வழி; கற்பனையற்ற வழி; துன்பமற்ற வழி. அவ்வழியில் நீ செல்லும்பொழுது உனக்கு அதில் யாதொரு ஸந்தேகமும்

உண்டாகாது. அவ்வழியில் உனக்கு அச்சமும் உண்டாகாது. அச்சமும் ஸந்தேகமும் இருள்வழியில் அல்லவா? குருநாதன் காட்டிய உண்மை வழியில் அவை எப்படி உண்டாகும்? ஆகையால், அவ்வழிதான் உண்மை வழியென்பதை, அவ்வழியே உனக்குச் சொல்லும். உன் குருநாதனை நீ கண்டு கேட்கவேண்டிய காரியம் உனக்கு ஒன்றும் அவ்வழியில் இல்லை. அவ்வழி உன் குருநாதனுக்கும் உனக்கும் பொதுவாய்க் கடவுள் படைத்திருக்கிற வழி. உனக்குமுன் அவ்வழியில் சென்றவர் அவர்; அவரால் காட்டப்பட்டு அவ்வழியில் அவருக்குப் பிறகு செல்லுகிறவன் நீ; உன்னால் காட்டப்பட்டு அவ்வழியில் செல்லுகிறவர் இனி எத்தனை பெயரோ. ஆதலின், ஸந்தேகமும் பயமும் உண்மை வழியின் லக்ஷணம் அல்ல. ஒரு அடி அவ்வழியில் வைத்ததும், அவ்வழியை நீ விடமாட்டாய். அந்த ஒரு அடி வைப்பதற்குத்தான் குருநாதன் உதவி. அந்த உண்மை வழியை நீ குருநாதனால் பெறுவதற்கு, அவருக்கு நீ செய்யவேண்டியது ஒன்றும் இல்லை. மேற்சொன்ன இருவகை முயற்சி உள்ளவர்களுக்கு, அவர்கள் பக்குவ நிலையில், அவ்வழியைத் திறக்கக் கடவுளால் அனுப்பப்பட்ட ஒரு தேவதூதன் அவர் என்பதை நீ அறி. அந்த தேவதூதனை உன் பக்குவத்தில் அனுப்புபவர் அந்தக் கடவுள்.

9. அறியாத காலத்தில் நம்பிச் செய்வதெல்லாம் பக்தி என்றும், அறிந்து செய்வதெல்லாம் ஞானம் என்றும் சொல்லப்படும். பக்தியின் இரண்டு பிரிவுகளில், நாமரூபங்களால் அவரை வழிபடுவதை 'பக்தி' என்றும், உலகில்

காட்டும் அன்பைக் ‘கர்மம்’ என்றும், சொல்வதும் உண்டு. ஞானத்தின் இரண்டு பிரிவுகளில், குருநாதன் காட்டிய கற்பனையற்ற வழியில் நடப்பதை ‘யோகம்’ என்றும், அவ் வழியின் முடிவை ‘ஞானம்’ என்றும் சொல்வதும் உண்டு. ஒரு பொருளைக் காணுமலிருந்தும் அதை முதலில் நம்பு வதும், பிறகு அதைக் காண்பதும் உலக இயல்பு. அப்படி நம்பாதவர் அதைக் காண்பது எப்போதும் இல்லை. ஆகையால், நம்புகிறவர்களுக்கு ஒரு காலம் இல்லாவிட் டாலும் ஒருகாலம் உண்டு. நம்பாதவர்களுக்கு ஒருகாலத் தும் இல்லை. இந்தத் தெய்வ நம்பிக்கையில் தீமையில்லை என்ற ஒன்றைக் கொண்டாவது நம்பு. நீ நன்மைக்கு உரியவன் ஆவாய். நம்பிக்கையைக் கொடுக்க வந்ததுதான் இந்த உலகம். உலகம் படைக்கப்பட்டதன் பயன் அதுதான். நம்பு; உன்னல் அடையப்படுவார் கடவுள்.

10. கடவுளைப்பற்றிய வேறு கொள்கைகளை நீ நம்பா விட்டாலும், “அவர் ஒருவர் உண்டு” என்ற அவ்வளவு நம்பு. அந்த விதை தன் வளர்ச்சியில் மிக ஊக்கமுள்ளது. எல்லாவற்றையும் இல்லையாக்கி, தன்னை மாத்திரம் எங்கும் நிறைத்துவிடுகிற அவ்வளவு மகிமையுள்ளது அந்த விதை. அந்தக் கடவுளைத் தவிர நீ ஒன்றையும் காணுமல், உன்னைக் கூட நீ காணுமல் பண்ணிவிடும் மகா மகிமையுள்ளது அந்த விதை. உண்மையில் எல்லாம் கடவுள்.

# 4. சாந்தம்.

1. சாந்தம் என்பது என்ன?—ஒருவன் சுழுத்தி அவஸ்தையை அடைந்திருக்கும்பொழுது, அதாவது அயர்ந்து தூங்கும்பொழுது, இவ்வுலகமிருந்தும் இதைப் பற்றிய கவலை ஏதாவது அவனுக்கு உண்டா? அவன் மனது ஆறுதலை அடைந்து குளிர்ந்திருந்தது. இவ்வாறே, ஒருவன் இவ்வுலகத்தைக் காணும்பொழுதும், இவ்வுலக ஸம்பந்தமான வேலைகளைச் செய்யும்பொழுதும், அவன் மனது கவலையற்றுக் குளிர்ந்திருக்குமானால் அதுவே சாந்தம்.

2. இவ்வுலகம் தோற்றிக்கொண்டிருக்கும்பொழுதும் மனது அப்படி குளிர்ந்திருக்குமா என்றால், அது இவ்வுலகத்தில் நாம் வைத்திருக்கும் மதிப்பைப் பொறுத்ததாயிருக்கிறது. பிறர் ஸொத்துக் கொள்ளைபோனால் அதில் நமது மனது அடைகிற சூட்டைவிட, நமது ஸொத்துக் கொள்ளைபோனால் அடைகிற சூடு மிகுதியாகவே இருக்கிறது; நம்முடைய பொருளிலேயே, ஒருபொருளுக்கு நஷ்டம் வந்தால் உண்டாகும் வருத்தம், மற்றொரு பொருளில் உண்டாவதில்லை. ஏன்? அந்தப் பொருளில் நாம் வைத்திருக்கும் மதிப்பைப் பொறுத்தே நமது மனத்தின் குளிர்ச்சியின் சூடும் உண்டாகிறது. அதனாலே, எல்லாப் பொருளுக்கும் ஒரே மதிப்பை ஒருவன் தெரிந்துகொள்வானாயின் அவன் மனது பரம சாந்த நிலையை அடையும். எல்லாவற்றையும் தனதாகவும் மிகச் சிறந்ததாகவும் வைத்துக்கொண்டாலும், இவனுக்குத் துன்பம் வர நியாய

யில்லை; ஏன்? ஏதற்கென்று இவன் துன்பப்படுகிறது? தன்னால் துன்பப்பட்டு முடியாதென்பதை அறிந்த மனதும் சாந்தத்தைத்தான் அடைகிறது. எல்லாவற்றையும் தன்னுடையதல்லவென்றும் அழியக்கூடிய பொய்ப்பொருளென்றும் ஒருவன் உணர்ந்தாலும், அப்பொழுதும் இவன் மனது குளிர்ச்சியில்தான் இருக்கும்.—ஆகவே, எல்லாப் பொருளுக்கும் ஒரே மதிப்பை ஒருவன் ஏற்படுத்திக் கொள்ளுவானாகில், சாந்தம் நிலைக்கும். இவன் மனக் கொள்கையால் இவனுக்கு உண்டாவது சாந்தம்.

3. இதற்கு ஒரு உபமானம் சொல்லுவோம். ஒருவன் ஒரு கனுக்கண்டு விழிக்கிறான். அந்தக் கனவைக் காணும் பொழுது, இவன் அந்தப் பொருளுக்கு வெவ்வேறான மதிப்பை வைத்திருந்ததனாலே, இவன் மனதும் பலவாறாகக் குளிர்ச்சியையும் சூட்டையும் அடைந்தது. கனவிலிருந்து விழித்தபிறகோ, அந்தக் கனவில் நடந்த அவ்வளவு செய்திக்கும் அவன் மனது அடையும் மாறுபாடு ஒன்றுமில்லை; ஒரே தன்மையை அடைகிறது. ஏன்? இப்பொழுது தான் அவன் மனது: கனவில் கண்ட அவ்வளவு பொருளுக்கும் ஒரே மதிப்பு என்பதைத் தெரிந்துகொண்டது. அந்தக் கனவு போனதற்கு அவன் வருந்தவில்லை; ஏன்? கனவையே ஒருவன் எப்பொழுதும் கண்டுகொண்டிருக்க முடியாது, ஒருகாலம் விழித்துத்தான் தீரவேண்டும் என்பதனை அவன் நன்கு உணர்ந்திருக்கிறான். இவ்வாறு, இவ்வுலகமாகிய கனவிலிருந்து இவன் ஒருகாலம் விழிக்காமல் முடியாது என்பதை உணர்ந்த ஒருவன் மனது எப்போதும் ஒரேநிலையில்தான் இருக்கும். அது குளிர்ச்சியான நிலைதான். அந்த நிலையே சாந்தம்.

4. இதனால் அவன் இவ்வுலகத்தோடு ஸம்பந்தமற்று இருப்பான் என்பதில்லை. அவன் சாந்தமும் குளிர்ச்சியும் அவன் மனதிலேதான். அவன் செய்கையில் சமயத்துக்குத் தகுந்த ஒரு மாறுதலைக் காட்டாமல் முடியாது. மனது சாந்தமடைந்ததன் பயன் இந்த மாறுதல்தான். அவன் மனது உண்மையை உணர்ந்து பற்றற்று சாந்தமடைந்திருப்பதனாலே, அவன் செய்கையில் உண்டாகும் மாறுதலெல்லாம் "நடுவு நிலை" என்னும் வரம்பை மீறாதனவா யிருக்கும். ஆனால், சாந்தம் அடையாதவனுடைய செய்கையில் உண்டாகும் மாறுதல்களோ, வரம்பை மீறினவைகளா யிருக்கும். ஆகலால், மனக்குளிர்ச்சியானது இவனுக்கே யன்றி உலகத்துக்கும் பெரிய நன்மையை உண்டுபண்ணுகிறது. உண்மையாய் நடக்கவேண்டிய வழியைக் காண்பிப்பது சாந்தம்.

5. ஒருவன், கையில் விளக்கு வைத்துக்கொண்டு நடக்கிறான், அந்த விளக்குக்கும் இவ்வுலகிலுள்ள மேடு பள்ளங்களுக்கும் ஏதாவது பகை உண்டா? இல்லை. ஆனால், விளக்குக்கும் இருட்டுக்குமே பகை. விளக்கு, இருட்டை ஓட்டி, மேடுபள்ளங்களின் நிலைமையை அறிவித்து, விளக்குக்கு உடையவனை ஏறியும், இறங்கியும், ஒதுங்கியும் ஜாக்ரதையாய்ப் போகச்செய்கிறது; "மேடு என் காலை இடறிற்று" என்றும், "பள்ளம் என்னைக் கீழே தள்ளிற்று" என்றும் வீணாய் அவைகள்மீது உண்டாகும் அபவாதத்தை விலக்கிற்று. இதுபோலவே, ஒருவனுக்கு சாந்தம் உண்டா யிருக்குமாயின், அந்த சாந்தநிலை, இவ்வுலகத்தை வெறுக்கவாவது பகைக்கவாவது செய்கிறதில்லை. ஆனால், இவ்வுலக இயல்பை அறியாது இடர்படுகிற ஒரு இருட்டை நீக்கு

கிறது. எந்தச் சமயம் எவ்வளவு மாறுபாடு அவசியமோ அந்தச் சமயத்தில் அவ்வளவு மாறுபாட்டை அடையச் செய்கிற சாந்தம் என்கிற விளக்கு இல்லாமையாலன்றோ, "இவ்வுலகம் துன்பமயமானது" என்று, மேடுபள்ளங்களை இகழ்வதுபோல் இகழ்கின்றனர். ஆகலின், இவ்வுலகம் முழுவதையும் ஒரு கனவாக ஒருவன் கருதி மகா சாந்தத்தை அடைந்திருப்பினும், அவன் இவ்வுலக ஸம்பந்தம் அற்றவன் என்றாவது இவ்வுலக கர்ரியங்களில் தலையிடாதவன் என்றாவது கருதவேண்டாம்; அவனே இவ் வுலகத்துக்கு அநுகூலமான ஸம்பந்தம் உள்ளவன். அவனே இவ்வுலக காரியங்களில் தலையிடுவதற்கு அதிகாரி. ஆகையால், தன் கடமைகளை ஒழுங்குபடுத்துவது சாந்தம்.

6. சாந்தமுடையவன் உலகத்தில் தலையிடுவது இவ் வுலகத்திலுள்ள கோணலை நிமிர்த்தவேயாம். அவனே இவ் வுலகத்தைக் கண்டு அஞ்சுவானுகில், இவ்வுலகத்தை ஒரு பொருளாகக்கொண்டு எனக்கு உனக்கு என்று போராடுகிற வர்கள் எப்படி உலகத்தைச் சீர்திருத்துவர்? அவர்களுக்குச் சுயநயமே மேலிட்டு, நடுவுநிலை என்னும் கண் குருடா யிருக்குமே. குருடர்களை வழிநடத்துபவனும் அவர் களுக்கு வைத்தியம் செய்பவனும் கண்ணுள்ளவனல்லவா! அதுபோல, இவ்வுலக இயல்பையும் இவ்வுலகுக்கு வேருன தம் இயல்பையும் உணர்ந்து பரம சாந்தத்தை அடைந்தவர் களே இவ்வுலகின் நன்மைக்குப் பாடுபடும் கடமை பூண்ட வர்கள். அவ்வாறு நன்மை செய்யாமலிருக்க அவர்களால் முடியாது: ஏன்? ஒரு குழந்தை தவறிக் கீழேவிழும் சமயத்தில் அதைத் தூக்காமலிருக்க எந்தக் கல்நெஞ்சுள்ள வனுல்தான் முடியும்! அதுபோல, உலகத்தாரின் துன்பத்தை

உள்ளபடி உணரும் ஞானக்கண் பெற்றவரன்றி, இவ்வுலகத்தாரை ஆதரிப்பார் யார்? ஆதலின், ஒருவன் இறந்தபிறகு அவன் பிணத்தில் எத்தனை வண்டிகள் ஏறிச் சென்றாலும் அந்த உயிருக்கு எப்படி அதில் வருத்தமில்லையோ, அது போல, நமதல்ல என்று ஒதுக்கிய இந்த உடலும் உள்ளமும் இந்த உலகத்தாரின் உபகாரத்தின்பொருட்டு, எவ்வளவு வருந்தினலும், அதில், அவ்வுடம்புக்கும் உள்ளத்துக்கும் உரியவனாகிய ஞானிக்குச் சிறிதும் கவலையில்லை. அவன், உழைப்புக்குஅஞ்சான்; துன்பத்துக்கு அஞ்சான். இவ்வளவு தைரியத்தையும் குளிர்ச்சியையும் கொடுப்பது, உண்மையுணர்ச்சியாகிய சாந்தம்.

7. சாந்தம் என்பது, பார்த்தால் ஏழைபோல் இருக்கும்; அதாவது ஒரு சக்தியும் அற்றதுபோல் இருக்கும். அது செய்யும் வேலை எதுவும் செய்யாது. அதற்கு உள்ள பிடிவாதமும் தைரியமும் எதற்கும் இருக்காது. ஸர்வஸித்திகளும் இதனிலே அடையப்படுவனவாம். மேருமலை சரிந்து விழுந்திடினும் அங்கே உண்டாகும் விகாரம் ஒருபுன் சிரிப்புத்தான். ஒருசமயம் அதுவும் இல்லாமலும் இருக்கும். இந்த நிலை லௌகிகம் வைதிகம் ஆகிய இரண்டிற்கும் சாதகம் இவனுக்கே உண்மையான உலக இன்பம்; இவனுக்கே உண்மையான மோக்ஷ இன்பம். எவ்விதத்திலும் ஒருவனுக்கு நன்மை செய்வது சாந்தம்.

8. இந்த சாந்தத்துக்கு எதிரிடையான விகாரங்களுக்கு, பல பெயர் இட்டிருக்கின்றனர். அவ் விகாரங்களே மனிதனைப் பரீக்ஷிப்பன. அவை நம்மைப் பரீக்ஷிக்கவரும் காலத்தில், நாம் விழிப்போடிருந்து, அந்த விகாரங்களின்

ஒரு நிழல்கூட நம்முடைய மனச்சாந்தமாகிய புஷ்பத்தில் விழாதபடி காத்துக்கொள்ள வேண்டும். உன் மனமாகிய புஷ்பம் கசக்கப்பட்டால்: வாஸனை குறையும், குளிர்ச்சி குறையும், நிறம் குறையும்; உனக்கும் பயனில்லை, பிறருக்கும் கொடுக்கமுடியாது, கடவுளுக்குப் பூசிக்கவும் தகாது. உன் மனத்தை புஷ்பத்திலும் சிறந்ததென்று அறி. உனக்கும் பிறருக்கும் கடவுளுக்கும் நீ செலுத்தவேண்டிய கடமைகளெல்லாம், இந்த மனப்பூவினாலேயே ஆக வேண்டியவைகள். உன் மனம் ஒரே நிலையில் குளிர்ந்து இருக்கட்டும். மனிதனுடைய ஸர்வ பாக்கியங்களுமாயிருப்பது அந்த சாந்தம்.

9. உன் ஆத்மாவாகிய தேவதையை சாந்தமாகிய பூவினால் இடைவிடாது அருச்சனை பண்ணு. அந்தப் பூஜையை விகாரங்களாகிய குழந்தைகளெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கட்டும். நாளடைவில் அந்தக் குழந்தைகளுக்கும் புத்தி வரும். தம்முடைய குழந்தைச் சேஷ்டைகளை விட்டு உன்போல் மகிழ அவைகளுக்கும் ஆசை உண்டாம். உன் சாந்த நிலையைப் பார்க்கப் பார்க்க, அந்த விகாரங்களுக்கெல்லாம் தம் நிலையில் தமக்கே வெறுப்புண்டாய்விடும். நீ பொறுமையோடு உன் பூஜையைச் செய். **விகாரத்தைக் கண்டு நீ விகாரத்தை அடையாதே. உன் சாந்தத்தைக் கண்டு அவர்கள் சாந்தமடையட்டும்.** எல்லாருக்கும் உண்டாகவேண்டியது சாந்தம்.

10. ஒரே வார்த்தை சொல்லுகிறேன்:—வேதத்தின் முடிவு சாந்தம்.

---

# 5. செயல்.

1. எல்லாம் கடவுள் செயல். அது அது, அதை அதைச் செய்யுமாறு அமைக்கப்பட்டிருப்பது அவர் செயலாலேயே. ஜடப்பொருள்கள் அவற்றிற்குரிய செயலைச் செய்வது அவராலே. சித்துப்பொருளாகிய உயிர்களும் அவற்றிற்குரிய செயலைச் செய்வது அவராலே. எல்லாம் அவர் செயல்.

அவையவை தாமே தம் தொழிலைச் செய்கின்றன; அவ்வாறிருக்க அவரால் என்பது எதற்காக — எனில்: ஜடப்பொருள்களைப்பற்றிப் பின்பு பேசுவோம். சித்துப் பொருளாகிய நம் செயல் யார்செயல் என்று பார்ப்போம் எந்த மனிதனும் தான் நல்ல நிலையிலே இருக்கவேண்டுமென்று கருதுகிறான். அதற்கென்று சில தொழில்களைச் செய்கிறான். ஆயினும், அத்தொழில்களின் பயனெல்லாம் ஒரே தன்மையையுடையவாய் இருக்கவில்லை. எல்லாருடைய நோக்கமும் தொழிலும் ஒன்றாயிருக்க, ஏன் அதன் பயன் வேறுபடுகின்றது? அங்குக் கடவுள் தம் செயல் என்ற அறிவை அளிக்கிறார். அவர் செயலன்றி இவன் செயலென்பது உண்மையாயின், எல்லாரும் ஒரே நிலையில் இருக்கவேண்டும். நிலைமையில் வேறுபாடு காணப்பட நியாயம் இல்லை. எவர்தான் தாம் முன்னுக்கு வருவதில் ஆசையில்லாதவர். பிறர் விஷயத்தில் அவர்களுடைய நோக்கங்கள் எப்படியிருந்தாலும் தம் விஷயத்தில் அவர்களுடைய நோக்கம் வஞ்சனையற்ற நோக்கமே. ஆகவே,

ஒரே நோக்கமுடைய ஜீவர்களுடைய நிலையில் வேறுபாடு காணப்படுவதால், எல்லாம் கடவுள் செயல்.

3. எல்லா ஜீவர்களுடைய நோக்கமும் ஒன்றுதான்; ஆயினும், அவரவர் முயற்சி வேறுபாட்டினாலே நிலைமை வேறுபாடு உண்டானது என்றால்: முயற்சி என்ன? அந்த ஜீவர்களின் உள்ளத்தில் தோன்றும் கற்பனைதானே. அந்தக் கற்பனைகளுக்கு மூலமாகிய நோக்கம் ஒன்றாயிருந்தும், முயற்சியாகிய கற்பனை வேறுபடுவானேன்? அங்கும் கடவுள் தம் செயல் என்பதனைக் காட்டுகின்றார் ஆகையால் எல்லாம் கடவுள் செயல்.

4. ஒரே நோக்கமாயினும், அவரவர் சக்திக்குத் தக்கபடி முயற்சி எடுத்துக்கொள்ளுகிறார்கள் என்றால்: சக்தி என்பது எதனால் வந்தது? அவரவர் உடம்பு மனம் இவற்றைப் பற்றியதுதானே. உடம்புக்கும் வேறாயுள்ள பொருள்களினாலும் இவன் சக்திகளுக்கு ஏற்றக்குறைவு உண்டாவதும் உண்டு. இவற்றையெல்லாம் கவனித்து ஒருவன் முயற்சி செய்யவேண்டியதுதான். ஆனாலும், இவன் எவ்வளவு சிறந்த முயற்சியைத்தான் செய்தால் தனக்கு நலம் என்று எண்ணுகிறானோ அவ்வளவு சிறந்த முயற்சிக்கு உரியதாக, தன்னுடைய மனம் உடம்பு முதலியவைகளையும் அவற்றின் சக்திகளையும் வேறுபடுத்திக் கொள்ள, இவனுக்குச் சக்தியில்லையல்லவா? ஆகையினாலே எல்லாம் கடவுள் செயல்.

5. நாளடைவில் தன் மனம், உடம்பு முதலியவற்றைச் செவ்வைபடுத்திக்கொள்ளுகிறான் என்றால் — என்




நாளடைவில், இவன் எண்ணினபொழுதெல்லாம் செல்வத்தைப் படுத்திக்கொள்ள முடியாமையால்தானே. அங்கும் இவனுடைய முடியாமை வெளிப்படுகின்றதன்றோ? ஆகையால் எல்லாம் கடவுள் செயல்.

6. இங்ஙனம் ஜீவர்களால் தாம் எண்ணியபடி முடியாமை நன்மைக்கோ தீமைக்கோ? நன்மைக்குத்தான். ஏன்? பெரும்பாலாரும் சுயநயம் உள்ளவர்களே; சுயநயம் உள்ளவர்கள் தாம் கருதிய பதவிக்கு வந்துவிட்டால், உலகத்துக்கு நன்மையோ தீமையோ நீயே பார். இனி சுயநயம் இல்லாதவர்கள் காரியங்களாவது பலிக்கக்கூடாதா என்றால், சுயநயம் இல்லாதவர்போல் வெளியில் தோன்றினும், அவர்களுக்குள்ளும் வேறுபாடு இருக்கிறது. அந்த வேறுபாடு, அவரவர் அகந்தையால் உண்டாவது. அங்கே "நாம்" என்ற எண்ணம், அதாவது—சுயநயம் அற்றதனாலே மற்றவரினும் நாம் சிறந்தவர் — என்ற எண்ணம் உண்டாயிருப்பின், அங்கும் கடவுள் அவர் காரியம் கைகூடாததாக்கி, "மற்றவரைப்போலவே நீயும் ஒருவன், உன்னை நான் நடத்துகிறேன்" என்று தம்மை வெளிப்படுத்துகிறார். சுயநயம் அற்று அதோடு நாம் என்ற அகம்பாவமும் அற்றவர் எவரோ அவரே கடவுளின் பிரதிநிதி. அவரிடத்துக் கடவுள் எப்பொழுதும் விளங்கிக்கொண்டிருப்பதனாலே, அதாவது, அவரிடம் "நாம்" என்ற அகந்தை உண்டாகிக் கடவுளை மறைக்காததனாலே, அவர் எண்ணுகிற எண்ணங்கள் பலிக்கின்றன. அவரே "சத்திய சங்கல்பர்" என்று கூறப்படுவர். அவரிடம் விளங்குவது கடவுளின் நேர் ஒளி. அங்கு இருட்டு இல்லை. அவரே கடவுளின் செயலை வஞ்சக

மற்று அறிந்தவர். அவரிடமிருந்து கடவுள் தமது சிருஷ்டியின் நோக்கத்தை நிறைவேற்றுகிறார். எல்லாம் கடவுள் செயல்.

7. நாம் என்ற எண்ணம் அற்ற ஸத்யஸங்கல்பர் ஒருவராவது இல்லையா? ஏன் உலகம் ஸர்வநன்மையையும் அடைந்திருக்கக்கூடாது—என்றால்: இதில் ஒரு ரகசியம் இருக்கிறது, "கடவுள் செயல்" என்று அறிந்த மகான்கள் அவர் செயல் என்பதைப் பிறருக்கு அறிவிப்பதில் நோக்கமுடையாராகின்றனர். இவ்வாறு "கடவுள் செயல்" "தம் செயலல்ல" என்று உணர்வதைக்காட்டிலும் வேறு நன்மை உலகத்தாருக்கு இல்லை. இவ்வாறு உணர்வதிலே எல்லா நன்மைகளும் அடங்கியிருக்கின்றன. ஆதலால், அவர்களுடைய நோக்கமெல்லாம் தாங்கள் உணர்ந்த கடவுளையும் அவர் செயலையும் மற்றவர்களுக்குப் போதிப்பதுதான். அவ்வாறு போதிப்பதிலும், "இப்பொழுதே நீங்கள் கடவுளை உணர்ந்துவிடுங்கள்" என்று போதிப்பதில்லை. தாங்கள் வந்த நல்வழிகளை விளக்குவார்கள். அதில் ஜனங்களை நடக்கும்படி தூண்டுவார்கள். அவ்வளவேயொழிய, "இப்பொழுதே நீங்கள் முக்தியில் இருங்கள்" என்று சொல்லார். ஏன்? ஜீவர்களால் ஒன்றும் முடியாது. கடவுளை நோக்கி, "இப்பொழுதே இவர்களை முக்தியில் வையும்" என்றும் சொல்லார்: ஏன்? அகம்பாவம் இல்லை. அவர் செயலை அந்தக் கடவுள் செய்கிறார்; நாம் என்ன ஏவுகிறது — என்று தோன்றும். ஆகவே, தம் கடமையைத் தாம் செய்வதைத் தவிர, பயனைத் தாம் கற்பிக்கமாட்டார். அதற்கு அதிகாரி கடவுளே என்று அவர்கள் அறிவார்கள். ஆகையால், உலகில் நடப்பதைத்

தாம் பார்ப்பதும், தம் கடமையைத் தாம் செய்வதும் தவிர, தாமாய்த் தனி உலகம் படைக்க அவர்கள் ஸங்கல்பிக்க மாட்டார்கள். ஏன்? அதுவும் ஒரு அகம்பாவம். சிருஷ்டி அதன் கிரமத்தை அநுசரித்தே இருக்கும். எதெது எப்படி நடக்கவேண்டுமோ அப்படி நடக்கிறது. எல்லாம் கடவுள் செயல்.

8. தம் செயலுக்கு மிஞ்சி ஒன்று இருக்கிறதை உணர்ந்தவர், எப்படி, ஒன்றை இப்படித்தான் ஆகவேண்டும் என்று எண்ணுவார்கள்? எண்ணமாட்டார்கள். தம் கடமை என்று எதையும் செய்வார்கள். பலனை உத்தேசிக்காமல் கருமம் செய் என்று வேதம் சொல்லுகிறது. எப்போதும் கோபமே கூடாது, சாந்தமாயிருக்க வேண்டும் என்று எண்ணிக்கொண்டிருக்கும் ஒருவனுக்கு, ஒருஸமயம் அவனையறியாமலே கோபம் வந்துவிடுதல் போல, இந்த ஸத்யஸங்கல்பர்களுக்கும், ஒரு ஸமயம், உலகில் நடக்கும் அநியாயம் பொறுக்காமல் "கடவுளே! இப்படி ஆனால் நல்லதே" என்ற எண்ணம் வந்துவிடும். அப்பொழுது அப்படியே நடக்கும். அதுதான் உலகத்தில் நடக்கும் அருமையான காரியங்களுக்கு வேர். அப்படி நல்லவர்மனது தன்னைமீறி ஒருபலனை இச்சிக்க வந்துவிடும் காலம், உலகத்தில் பெரிய மாறுதலை உண்டாக்குகிறது. இது உலக ரீதியாயிருக்கிறது. இதை யார் மாற்றுகிறது? எல்லாம் கடவுள் செயல்.

9. இப்பொழுது எது நடக்கிறதோ அது ஒரு நியாயத்தில் அகப்பட்டதுதான். அதுதான் நியாயம். எது எது எப்படி இருக்கிறதோ அது அது அவர் செயலால்

தான் உள்ளபடி நோக்கினால், "திருடுகிறவனைத் திருடத் தூண்டுகிறதும் அது" என்று எண்ணுவதிலும் குற்றத்தைக் காணோம்: ஏன்? "திருடுகிறவனைத் தகுந்தபடி சிக்ஷிக்கத் தூண்டுவதும் அது" என்று தகுந்த சிக்ஷை செய்யலாம். இவ்வாறன்றி, திருடன்மீது நாம் பகை பாராட்டலாகாது என்பது கடவுள் செயல் என்று அறிந்ததன் பயன். திருடன்மீது பகையில்லாவிட்டாலும், அவன் திருட்டுக்கும் நமக்கும் பகை உண்டு என்பதும், கடவுள் செயல் என்று அறிந்ததன் பயன்தான். ஏனெனில், அந்தத் திருடனுக்கும் அந்தத் திருட்டுக்குமே பகை உண்டு. எப்படி அறிகிறோமென்றால், அந்தத் திருடன் வீட்டில் ஒருவன் திருடும்பொழுது அவன் சும்மா இருக்கிறானா? இல்லையே. ஆகையால், தீமை கூடாது என்பதையும் நன்மை கூடும் என்பதையும் உணராதவர் யார்? ஆதலின், கடவுள் செயல் என்ற எண்ணம் வந்தால் உலகத்தின் கடமைகள் ஒழுங்காய் நடக்கும். இதைத் தவிர வேறு நமக்கு ஒன்றும் தெரியாது. தெரிந்ததைத் தான் சொல்லலாம். தெரியாததைக் குறித்துக் கவலை வேண்டாம். அதுவும் கடவுள் செயல்.

10, கடவுளால் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் ஞானத்தின் பயன்களில், கடவுள் செயல் என்று அறிவதும் ஒன்று. கடவுளே, நீர் ஏன் இப்படிச் செய்கிறீர் என்று கேட்க நமக்கு வாய் இல்லை. இப்படி வாயில்லாத இடங்கள் எந்த மதத்திலும் உண்டு நம் செயல் நாம் எண்ணியபடி பலிப்பதில்லாததனாலே, அதாவது நம்முடைய வல்லமை பரிபூரணமாயிராததனாலே, நாம், "கடவுள்" செயல் என்று

சொல்லாமல் முடியாது. நமக்குள்ளதுதான் ஜடப்பொருள்களுக்கும். ஜடப்பொருளை விட நம்முடைய நியாயம் ஒன்றும் உயர்ந்துவிடவில்லை. எல்லாம் ஒன்றுதான். கடவுள் செயல் என்பதை ஒருவன் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், தன் சக்திக் குறைவை அவன் ஒப்புக்கொள்ளுகிறான். அதுவே கடவுள் செயல்.

---

## 6. அகம்பாவம்.

---

1. ஏ! அகம்பாவமே! இவ்வுலகில் விளையும் தீமையெல்லாம் உன்னாலேயே. எல்லா அரசர்களும் எல்லா ஞானிகளும், உன்னை அழிக்கவேண்டியே பலபல சட்டங்களும் தத்துவ உபதேசங்களும் செய்கிறார்கள். இவ்வாறு அவர்களெல்லாரும் எத்தனையோ காலமாய் முயற்சி செய்தும், ஐயோ! நீ இன்னும் அழியாமல் ஒளிந்து ஒளிந்து புறப்படுகிறாயே! உனக்கு ஒரு அழிவுகாலம் வராதா!— ஏன்? வந்துகொண்டுதானிருக்கிறது. உன்னைக் கொல்ல மற்றொரு அகம்பாவம் புறப்பட்டிருக்கிறது. அதுதான் பிரம்மாகம்பாவம்.

2. ஏ! அகம்பாவமே! உன்னைப்போல் உன் பகைவனையும் ஸாமானியனாகக் கருதாதே. நீ, அழியக்கூடியவன்; அவனோ, அழியாதவன் நீ, "நான்" என்ற கர்வம் உள்ளவன்: ஏனெனில், "நான்" என்றும் "நீ" என்றும் "அவன்" என்றும் இவ்வாறு பலவாகப் பேதப்படுத்திக்கொண்டு போவதனாலே. உன் பகைவனோ, "நான்" என்ற கர்வம்

அற்றவன்: என்? அவன் பேதத்தையெல்லாம் ஒன்று படுத்துகிறவன்; எல்லாரையும் தானாகச்செய்துகொள்ளுகிறவன். அன்றியும், உனக்கு அவன்மீது பகை உண்டு: என்? நம்மை அழிக்கவந்தவன் என்று. அவனுக்கோ உன்மீது பகை இல்லை: என்? அவன் ஸந்நிதியில் உன்னைக் காணோம். உன்னையும் தன் அவயவங்களில் ஒன்றாகப் பார்க்கிறான். அவன் ஸந்நிதியில் உன் பொய்ம்மை உன்னை அழிக்கிறதேயொழிய, உன்னை அவன் அழிக்க நீ ஒரு பொருளாகவே அவனுக்குத் தோற்றமாட்டாய். ஆகையால், அகம்பாவமே! உனக்கு அவன் சத்துருவேயொழிய அவனுக்கு நீ சத்துரு அல்ல. இவ்வாறு சொல்வதைவிட இன்னம் சுருக்கமாய்ச் சொல்லலாம்: அதாவது, உனக்கு நீயே சத்துரு. எப்படியெனில், உன் பேராசையால் நீ மற்ற இடங்களில் போனதுபோல் அந்தப் பெரியவன் முன்பும் போனாய்; அன்றுமுதல் நீ கெட்டாய். ஆகையால், உன்னை விழுங்கி இருளாக்கி, ஓங்கிப் பரந்த ஒளியாயுள்ளது பிரம்மாகம்பாவம்.

3. ஓ! அகம்பாவமே! நீ செய்யும் தீமைக்கு அளவில்லை. மற்றவரைவிட உன்னை உயர்த்திக்கொண்டாலொழிய உனக்குத் திருப்தி இல்லை. உன்னைவிடப் பிறரைத் தாழ்த்தினாலொழிய உனக்குத் திருப்தி இல்லை. உனக்கு என்னபெயர் வைத்துக்கொண்டால் பெருமை என்றும் உனக்கு என்ன வடிவம் வைத்துக்கொண்டால் அழகு என்றும் உன்னை எல்லாரும் வணங்குகிறார்களா என்றும், உன் பேச்சுக்கு மறுபேச்சு ஒருவரும் சொல்லாமலிருக்கிறார்களா என்றும், உன்னிலும் மேலான பொருள் இல்லை என்று அவர்கள் பேசிக்கொள்ளுகிறார்களா என்றும்—இவ்வாறு

நீ எண்ணுகிற எண்ணங்களுக்குக் கணக்கில்லை, ஐயோ! உன் வாழ்வு எவ்வளவு அற்பம்! இப்படியிருக்க, நீ செய்கிற யோசனை எவ்வளவு, நீ செய்கிற தீமை எவ்வளவு? இந்த உன் எண்ணங்களிலும், பிறரினின்றும் உன்னைப் பிரித்துக் கொள்வதிலும் உனக்கு இன்பம் இருக்கிறதென்று நீ மயங்கியிருக்கிறாய். இவையெல்லாம் உனக்குப் பெருமை செய்வன அல்ல. ஏன்? இப்படி நினைக்க ஒவ்வொருவனும் பாத்யமுள்ளவனல்லவா? கோடானுகோடிப் பேர்களுக்கு பாத்யமுள்ள ஒரு பொருளில், உனக்கு வீதம் எவ்வளவு? இப்படியிருக்க, நீயே முழுதும் கட்டியாள எண்ணும் வீண் எண்ணம் வேண்டாம். இதனாலே உனக்கும் தீமை செய்துகொண்டு, பிறருக்கும் தீமை விளைக்கிறாய். என் அன்பான யோசனையைக் கேள். நீ பகைவனென்று யாரை எண்ணியிருக்கிறாயோ, அவனே உள்ளபடி உனக்கு நண்பன். உன்னை உண்மையான பெருமைக்கும் நன்மைக்கும் ஆளாக்க அவனுக்குத் தெரியும். அவனிடம் அடைக்கலம் புகு. உன்னைப் பகைவனென்று கருதாத கருணையாளி அந்தப் பிரம்மாகம்பாவம்.

4. அந்தப் பிரம்மாகம்பாவத்தை நீ அடைக்கலம் புகுந்தால், உன்னை அது என்ன பெருமையில் வைக்கப் போகிறதென்பதை இப்பொழுது நீ என்ன பாடுபட்டாலும் அறியமாட்டாய். யான் எவ்வளவு சொன்னாலும் நீ அறிய மாட்டாய். அவனை அடைக்கலம் புகுந்து, அதனால் கிடைக்கும் உன் சொந்த அநுபவத்தால் அறியவேண்டிய விஷயம். தன் பதவியே உனக்கும் பதவியாக அவன் உன்னை வைப்பானே யொழிய, வேறெந்தச் சிறிய பதவியிலும் உன்னை வைக்கமாட்டான். ஆகையால், உன்

கதியைக் குறித்து நீ சிறிதும் ஸந்தேகப்படாதபடி சரணம் அடை. சரணமடைந்த அந்தக்ஷணம் முதலே உனக்கு இன்பம் தோற்றுவிட்டால், உடனே திரும்பிவிடு. பால் உண்ணுபவனுக்கு உண்ணத் தொடங்கியதுமுதலே சுவையும், உண்டு முடிந்ததும் பசியாறுதல் என்ற பரம திருப்தியும் உண்டாவதுபோல, நீ அவனைச் சரணமடைந்தது முதலே இன்பமும், அச்சரணாகதியின் பயனாக இன்பம் துன்பம் என்னும் பேதமற்ற பரமானந்தமும் நீ பெறுவை. ஆகையால் ஸந்தேகமற்று உன்னை அடையத் தகுந்தவன் அந்தப் பிரம்மாகம்பாவம்.

5. அவனைச் சரணமடைந்த பிறகு உன் பெயர் என்ன?—உன் பெயரன்றி வேறு பெயரோ இல்லை. வேதம் புகழ்வது உன்னைக் குறித்து: உலகத்தார் புகழ்வதெல்லாம் உன்னைக் குறித்து: மதங்கள் அருமையாய் உபதேசிப்பதெல்லாம் உன் பெயரை. உன் வடிவம் அப்பொழுது என்ன?—எல்லாம் உன் வடிவம். உன் வடிவையன்றி ஒருவருக்கும் வடிவம் இல்லை. கோவிலில் வைத்து வணங்கப்படுபவன் நீ: வேதத்தில் வர்ணிக்கப்படுபவன் நீ: திருவிழாக் கொண்டாடப்படுவது உனக்கு. உன் சக்திதான் என்ன?—உன் ஸந்நிதானத்தாலேயே உலகம் நடக்கிறது. அது அது அப்படி அப்படி விளங்குகிறது உன்னாலேயே. சுருக்கமாய்ச் சொல்லுமிடத்து, எல்லாப் பொருள்களும் உன்னைப்பற்றிப் புகழ்ந்து உனது இருப்புக்குச் சாக்ஷி சொல்லுகின்றன. இதே அவைகளுடைய வேலை. இவ்வாறான ஒரு பதவி உனக்கு வரும் என்று நீ கனவிலும் கண்டிருக்க மாட்டாய். இப்பொழுதே புறப்படு. அபிமானத்தை விடு. உன் வரவுக்கு எதிர்பார்த்திருக்கிறான் பிரம்மாகம்பாவம்,

6. கனவினின்றும் விழிக்க உனக்கு எண்ணமோ, இன்னம் கனவு கண்டுகொண்டிருக்கவே எண்ணமோ? கனவில் கண்டபொருள் எத்தனை நேரம் நிலைக்கும். சோம்பலையும் தூக்கத்தையும் விடு விழித்துக்கொள். உன் தோற்றங்களை நீயாகக்கண்டு ஏன் வீண் கற்பனைகள் செய்துகொண்டிருக்கிறாய்? உன் தோற்றங்களைக் காண்கிற உன்னை யார் என்று நீ பார். உன்னிடத்தில் தோன்றி உன்னிடத்தில் லயிக்கக்கூடியவைகளை நீயாக மயங்காதே விழி. இந்தக் கனவிலும் உன் விழிப்பு மேலானதென்று, விழித்த மறு க்ஷணமே நீ உணரப்போகிறாய். எழுந்திரு. உன் விழிப்பைக் கண்டு மகிழக் காத்திருக்கிறது பிரம்மாகம்பாவம்.

7. உன் கனவு போய்விடுமே என்று நீ பயப்பட வேண்டாம். இதே கனவை நீ நன்றாய்ப் பார்க்கலாம், ஆனால், இப்பொழுது நீ பார்ப்பதுபோல மயங்கிக்கொண்டு பார்க்கவேண்டாம். மிகுந்த தெளிவோடும் புன்சிரிப்போடும் உன் கனவே நீ காணலாம். அது உனக்கு ஒரு வேடிக்கையாயிருக்கும். பளுவாயிருக்காது. நீ கனவு கண்ட நினைப்பில் அவ்வளவும் உனக்கு உருவமாய்த் தோற்றும். விழித்துக் கொண்டு, உன் கனவைக் கனவென்று உணர்ந்து பார். கனவை நனவென்று எண்ணிக்கொண்டு பார்க்கிற அந்த மயக்கந்தான் உனக்குக் கூடாது கனவைக் கனவென்று பார். அதற்காக நீ அடையவேண்டிய இடம் பிரம்மாகம்பாவம்.

8. உன் நன்மைக்கு இது சொன்னேன். எனக்கு இதில் என்ன லாபம்? நம்பிப் பார்த்து, நன்மையில்லாவிட்டால் திரும்பலாகாதா! எத்தனை பெரியோர்களுடைய

சொல்லும் உனக்குப் பயனற்றதாகுமானால், நான் செய்வதென்ன! இதனிலும் மேலான பதவி இல்லை. உனக்கும் நன்மை: உன்னால் மற்றவருக்கும் நன்மை. உன் அகம்பாவத்தை இப்பொழுது இதிலும் காட்டவேண்டாம். புறப்படு. உன் ஸொந்த மனுஷன் பிரம்மாகம்பாவம்,

9. ஏ! அகம்பாவமே! உலகத்துக்கெல்லாம் நீ அடிமையாகி உழல்வதைப் பார்! உன் நிலைமை எவ்வளவு பரிதாபம்! ஒவ்வொருவரும் உன்னை எதிர்க்கிறார்கள். நீ "எனக்குத் தான்" என்றால் மற்றவரெல்லாரும் "எனக்குத்தான், எனக்குத்தான்" என்கிறார்கள். நீ "நான் தான் பெரியவன்" என்றால், "ஏன்? நாங்கள் தான்" என்கிறார்கள் மற்றவர்கள். உன்னையொழிய மற்ற எல்லாம் உனக்குப் பகையே. அவர்கள் படுத்தும் துன்பத்தால், உன் கற்பனை கோடானு கோடியாய் வளருகிறதே! ஒருவனைச் சரணமாக அடைந்து உயர் பதவி பெறலாகாதா! உன் பகைவரெல்லாரும் உன்னை வணங்கி நேசிப்பார்களே! "எல்லாம் உங்களுக்கு"—என்று நீ சொல்லிவிட்டால், உனக்கு எல்லாரும் நண்பர்தான். அவ்வளவு பெருந்தன்மையை உனக்குக் கொடுக்கும் ஒரு மனிதன் இருக்கிறான்; அவனே பிரம்மாகம்பாவம்.

10. ஒரே வார்த்தை சொல்லுகிறேன். இது என் அகம்பாவத்தால் நான் சொன்ன வார்த்தை அல்ல. இது [illegible]வின் [illegible]மைகளில் ஒன்று. என் நன்மைக்கு உன் நன்மைக்கு இ[illegible] [illegible]ர்த்தை நான் சொல்லவில்லை. எல்லாருடைய [illegible]லிருந்தும் சொன்னேன். உண்மை பிரம்மாகம்பாவம்.




அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை துணை:

சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

---